AL/2017/46/T-I



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

හින්දු ශිෂ්ටාචාරය I
இந்து நாகரிகம் I
Hindu Civilization I

46 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

அறிவுறுத்தல்கள் :

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.

※ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி (×)** இடுவதன் மூலம் காட்டுக.

**1.** "என்னை இறப்பிலிருந்து இறவாமைக்கு இட்டுச் செல்வாயாக" எனக் குறிப்பிடுவது
(1) மகாபாரதம் (2) இராமாயணம் (3) பிருகத்சம்கிதை
(4) பிராமணம் (5) உபநிடதம்

**2.** 'பண்பாடு' என்ற பதத்திற்குப் பழந்தமிழ் இலக்கியங்களிற் சுட்டப்படும் சொல்
(1) மரபு (2) சால்பு (3) கலை
(4) தத்துவம் (5) ஒழுக்கம்

**3.** மாந்திரீகக் கிரியைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வேதம்
(1) இருக்கு வேதம் (2) யசுர் வேதம் (3) சாம வேதம்
(4) அதர்வ வேதம் (5) தனுர் வேதம்

**4.** இருக்கு வேதம் கூறும் யாகக் கிரியைகளை முன்னின்று நடத்துபவன்
(1) ஹோதா (2) சிவாச்சாரியார் (3) உத்காதா
(4) அலங்கரணாச்சாரியார் (5) அத்வர்யு

**5.** இந்துப் பண்பாட்டில் இசைமரபு வளம்பெற முன்னோடியாக அமைந்தது
(1) நாட்டிய சாஸ்திரம் (2) யசுர் வேதம் (3) சாம வேதம்
(4) பகவத்கீதை (5) ஆயுள் வேதம்

**6.** ஆரணியகம் என்பது எதனைப் பற்றிக் குறிப்பிடுகின்றது ?
(1) பிரமச்சரிய வாழ்க்கை
(2) வானப்பிரஸ்தனுக்குரிய சமய அனுட்டானங்கள்
(3) இல்லற தர்மம்
(4) இறப்பின் பின் உள்ள வாழ்வு
(5) திருக்கோயில் மரபு

**7.** அர்த்தசாஸ்திரம் என்ற நூலின் ஆசிரியர்
(1) பராசரர (2) மனு (3) வசிட்டர்
(4) கௌடில்யர் (5) இராமானுஜர்

**8.** விஷ்ணுவின் அவதாரங்களில் மூன்றின் பெயர்களைக் கொண்ட தொகுதி
(1) அனந்தசயனர், கிருஷ்ணர், கூர்மம்
(2) நாராயணர், வியாசர், புத்தர்
(3) மத்ஸ்யம், வாமனம், கூர்மம்
(4) கிருஷ்ணர், பாதராயணர், புத்தர்
(5) கல்கி, வைகுந்தப் பெருமாள், வாசுதேவன்

[பக். 2 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

හින්දු ශිෂ්ටාචාරය I
இந்து நாகரிகம் I
Hindu Civilization I

46 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

அறிவுறுத்தல்கள் :

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.

※ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி (×)** இடுவதன் மூலம் காட்டுக.

**1.** "என்னை இறப்பிலிருந்து இறவாமைக்கு இட்டுச் செல்வாயாக" எனக் குறிப்பிடுவது
(1) மகாபாரதம் (2) இராமாயணம் (3) பிருகத்சம்கிதை
(4) பிராமணம் (5) உபநிடதம்

**2.** 'பண்பாடு' என்ற பதத்திற்குப் பழந்தமிழ் இலக்கியங்களிற் சுட்டப்படும் சொல்
(1) மரபு (2) சால்பு (3) கலை
(4) தத்துவம் (5) ஒழுக்கம்

**3.** மாந்திரீகக் கிரியைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வேதம்
(1) இருக்கு வேதம் (2) யசுர் வேதம் (3) சாம வேதம்
(4) அதர்வ வேதம் (5) தனுர் வேதம்

**4.** இருக்கு வேதம் கூறும் யாகக் கிரியைகளை முன்னின்று நடத்துபவன்
(1) ஹோதா (2) சிவாச்சாரியார் (3) உத்காதா
(4) அலங்கரணாச்சாரியார் (5) அத்வர்யு

**5.** இந்துப் பண்பாட்டில் இசைமரபு வளம்பெற முன்னோடியாக அமைந்தது
(1) நாட்டிய சாஸ்திரம் (2) யசுர் வேதம் (3) சாம வேதம்
(4) பகவத்கீதை (5) ஆயுள் வேதம்

**6.** ஆரணியகம் என்பது எதனைப் பற்றிக் குறிப்பிடுகின்றது ?
(1) பிரமச்சரிய வாழ்க்கை
(2) வானப்பிரஸ்தனுக்குரிய சமய அனுட்டானங்கள்
(3) இல்லற தர்மம்
(4) இறப்பின் பின் உள்ள வாழ்வு
(5) திருக்கோயில் மரபு



**7.** அர்த்தசாஸ்திரம் என்ற நூலின் ஆசிரியர்
(1) பராசரர (2) மனு (3) வசிட்டர்
(4) கௌடில்யர் (5) இராமானுஜர்

**8.** விஷ்ணுவின் அவதாரங்களில் மூன்றின் பெயர்களைக் கொண்ட தொகுதி
(1) அனந்தசயனர், கிருஷ்ணர், கூர்மம்
(2) நாராயணர், வியாசர், புத்தர்
(3) மத்ஸ்யம், வாமனம், கூர்மம்
(4) கிருஷ்ணர், பாதராயணர், புத்தர்
(5) கல்கி, வைகுந்தப் பெருமாள், வாசுதேவன்

[பக். 2 ஐப் பார்க்க

**9.** கணங்களுக்குத் தலைவன் என்ற சிறப்புக்குரிய தெய்வம்
(1) விநாயகர் (2) விஷ்ணு (3) காந்தர்வர்
(4) வீரபத்திரர் (5) பைரவர்

**10.** வட இந்திய பக்தி இயக்கத் தலைவர்கள் மூவரின் பெயர்களைக் கொண்ட தொகுதி
(1) நாமதேவர், அப்பைய தீட்சிதர், ஸ்ரீசைதன்யர்
(2) துளசிதாஸர், விபுலானந்தர், கஸ்தூரிபாய்
(3) இராமானந்தர், கபீர்தாசர், நாமதேவர்
(4) மீராபாய், இராமானந்தர், சங்கரர்
(5) துளசிதாஸர், கபீர்தாஸர், அருணகிரிநாதர்

**11.** ஆரிய சமாஜத்தைத் தோற்றுவித்தவர்
(1) இராஜாராம் மோகன்ராய் (2) சுவாமி விவேகானந்தர் (3) தயானந்த சரஸ்வதி
(4) அன்னி பெசன்ற் அம்மையார் (5) சித்பவானந்தர்

**12.** யாழ்ப்பாணத்தில் சைவபரிபாலன சபையைத் தாபிப்பதில் முன்னோடியாகத் திகழ்ந்தவர்
(1) இந்துபோர்ட் இராசரத்தினம் (2) வித்துவசிரோமணி ந. ச. பொன்னம்பலபிள்ளை
(3) சுவாமி விபுலானந்தர் (4) சைவப்புலவர் கா. அருணாசலதேசிகர்
(5) பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை

**13.** இலங்கையில் பாடல்பெற்ற சிவாலயங்கள்
(1) பொன்னம்பலவாணேஸ்வரம், நகுலேஸ்வரம்
(2) வண்ணை வைத்தீஸ்வரர் கோவில், சந்திரசேகரேஸ்வரம்
(3) திருக்கோணேஸ்வரம், திருக்கேதீஸ்வரம்
(4) வானவன் மாதேவீஸ்வரம், திருக்கோணேஸ்வரம்
(5) நகுலேஸ்வரம், முன்னேஸ்வரம்

**14.** கலாயோகி ஆனந்த குமாரசுவாமி, கலை உருவாக்கம் பற்றித் தரும் சிறப்பு விளக்கம்
(1) தூய உளச் செயற்பாடு (2) சமய நம்பிக்கையின் வெளிப்பாடு
(3) கலை ரசனை (4) விக்கிரகங்களின் சிறப்பு
(5) கோபுரத்தின் அமைப்பு



**15.** ஸ்தபதி என்பவன்,
(1) கோயிற் திருப்பணிக்கு நிதியுதவி செய்பவன்.
(2) கோயிற் கட்டடக்கலையிற் தேர்ச்சிமிக்கவன்.
(3) கோயில் பரிபாலனம் செய்பவன்.
(4) ஆலயங்களில் பஞ்சபுராணம் ஓதுபவன்.
(5) ஆலயக் கிரியைகளிற் தேர்ச்சிமிக்கவன்.

**16.** பல்லவர் கால சாசனங்கள் சிலவற்றில் 'பெரிய கற்றளி' எனச் சிறப்பாகக் குறிப்பிடப்படும் கோயில்
(1) தருமராஜ ரதம் (2) திரிமூர்த்தி மண்டபம் (3) காஞ்சி கைலாசநாதர் கோயில்
(4) மண்டகப்பட்டு (5) வல்லம்

**17.** சிவாலயத்தில் விமான கோஷ்டங்களில் இடம்பெறும் தெய்வங்களின் பெயர்கள் அடங்கிய தொகுதி
(1) தட்சணாமூர்த்தி, மகாவிஷ்ணு, பிரம்மன், காமாந்தகர்
(2) இலிங்கோற்பவர், தட்சணாமூர்த்தி, பிரம்மன், துர்க்கா
(3) தட்சணாமூர்த்தி, இலிங்கோற்பவர், பிரம்மன், விஷ்ணு
(4) திரிபுராந்தகர், இலிங்கோற்பவர், காலாரிமூர்த்தி, விநாயகர்
(5) உமாமகேஸ்வரர், காமாந்தகர், அர்த்தநாரீசுவரர், சோமாஸ்கந்தர்

**18.** விக்கிரக் கலையில் 'சிலா பரீக்ஷணம்' என்பதனாற் கருதப்படுவது
(1) உலோகத்தைத் தேர்ந்தெடுத்தல்
(2) சுபவேளையைத் தேர்ந்தெடுத்தல்
(3) சுதை விக்கிரகத்திற்கான பொருளைத் தேர்ந்தெடுத்தல்
(4) மரத்தைத் தேர்ந்தெடுத்தல்
(5) கல்லைத் தேர்ந்தெடுத்தல்

**19.** முதலாழ்வார்கள் எனப் போற்றப்படும் மூவரின் பெயர்கள் அடங்கிய தொகுதி
(1) நம்மாழ்வார், பேயாழ்வார், ஆண்டாள்
(2) பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்
(3) பெரியாழ்வார், நம்மாழ்வார், பேயாழ்வார்
(4) பூதத்தாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடியாழ்வார்
(5) பொய்கையாழ்வார், பெரியாழ்வார், நம்மாழ்வார்

[பக். 3 ஐப் பார்க்க

**20.** இந்துப் பண்பாடு தென்கிழக்காசிய நாடுகளில் பரவியதில் செல்வாக்குச் செலுத்திய இலக்கியங்களைக் கொண்ட தொகுதி
(1) மகாபாரதம், இராமாயணம், நாட்டிய சாஸ்திரம்
(2) சுக்கிரநீதி, ஸ்ரீபாஷ்யம், மகாபாரதம்
(3) இராமாயணம், வேதாந்த சூத்திரம், ஆத்திசூடி
(4) நாட்டிய சாஸ்திரம், மானசாரம், மணிமேகலை
(5) சிலப்பதிகாரம், ஸ்ரீபாஷ்யம், வேதாந்த சூத்திரம்

**21.** பௌத்தத்தின் அடிப்படைக் கோட்பாடாகிய பஞ்சசீல ஒழுக்கங்களில் மூன்றினைக் கொண்ட தொகுதி
(1) மது அருந்தாமை, தெய்வ உருவங்களை வழிபடுதல், இல்லற தர்மம் காத்தல்
(2) தரையில் படுத்தல், பல்தேய்க்காமை, நின்று உண்ணல்
(3) கொலை செய்யாமை, களவின்மை, மது அருந்தாமை
(4) தேன் உண்ணாமை, இரவில் உண்ணாமை, பொய்யாமை
(5) பிறர் மனை நயவாமை, பல்தேய்க்காமை, பால் அருந்தாமை

**22.** தென்கிழக்காசியாவில் அங்கோர்வாட் ஆலயம் அமைந்துள்ள நாடு
(1) சம்பா (2) ஜாவா (3) மலேஷியா (4) தாய்லாந்து (5) கம்போடியா

**23.** "வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமசிவாயவே" எனப் பஞ்சாட்சர மந்திரத்தைப் போற்றிப் பாடியவர்
(1) அப்பர் (2) மாணிக்கவாசகர் (3) சம்பந்தர்
(4) சுந்தரர் (5) காரைக்காலம்மையார்

**24.** காசிவாசி செந்திநாதையர் இயற்றிய நூல்களில் மூன்றினைக் கொண்ட தொகுதி
(1) பிரபுலிங்க லீலை, வேதாந்த சூடாமணி, சித்தாந்த சூடாமணி
(2) பராபரக்கண்ணி, பரிபூரணானந்தம், பரசிவ வணக்கம்
(3) பிரமாண தீபிகை, சிவயோக சாரம், சிவயோக ரத்தினம்
(4) சைவ சமய சிந்தாமணி, மெய்ஞ்ஞான தீபம், முருகன் மகத்துவநுட்பம்
(5) ஞானரத்தினாவளி, வச்சிர தண்டம், சைவ வேதாந்தம்

**25.** இலிங்கோற்பவ வடிவம் உணர்த்தும் தத்துவம்
(1) ஐந்தொழில் (2) அகந்தையுடையவர்கள் இறைவனை அடைய முடியாது.
(3) திருமணக் கோலம் (4) குருதத்துவம்
(5) ஆன்ம தத்துவம்

**26.** "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்..." என்ற அப்பரின் தேவாரப் பாடலில் வர்ணிக்கப்படும் தெய்வம்
(1) விநாயகர் (2) மகாமாரி (3) நடராசர் (4) முருகன் (5) திருமால்

**27.** மத்துவர் விளக்கவுரை எழுதிய நூல்களை மாத்திரம் கொண்ட தொகுதி
(1) வேதாந்த சூத்திரம், தசோபநிடதங்கள், பகவத்கீதை
(2) பகவத்கீதை, பிரம்மபுராணம், கடோபநிடதம்
(3) வேதாந்த சூத்திரம், ஸ்ரீபாஷ்யம், பகவத்கீதை
(4) பிரம்ம சூத்திரம், கல்ப சூத்திரம், பிரம்மபுராணம்
(5) பாகவத புராணம், ஸ்ரீபாஷ்யம், கல்ப சூத்திரம்

**28.** சைவசித்தாந்தம் என்பதன் பொருள் யாது ?
(1) முப்பொருள் (2) மும்மலம் (3) மூவினை
(4) சைவத்தின் முடிந்த முடிவு (5) நால்வகை முத்தி

**29.** வேதங்களின் ஞான காண்டம் எனப் போற்றப்படுபவை
(1) சங்கிதைகள் (2) பிராமணங்கள் (3) ஆரணியகங்கள்
(4) வேதாங்கங்கள் (5) உபநிடதங்கள்

**30.** உபநிடதங்களைத் தொகுத்து பிரமசூத்திரம் என்ற பெயரில் ஆக்கியவர்
(1) வேதவியாசர் (2) யாக்ஞவல்கியர் (3) பாதராயணர்
(4) நிம்பாக்கர் (5) நாரதர்

**31.** பகவத்கீதை கூறும் கர்மயோகத்தின் பிரதான உபதேசம்
(1) செய்யும் செயலில் துறவு (2) இல்லற வாழ்வு (3) பிரம்மச்சரியம்
(4) ஞானம் (5) பக்தி

[பக். 4 ஐப் பார்க்க

8242

**32.** 'விறகில் தீ போல் பிரமதத்துவம் மறைந்துள்ளது' எனக் கூறும் உபநிடதம்
(1) முண்டக உபநிடதம் (2) ஐதரேய உபநிடதம் (3) மாண்டுக்கிய உபநிடதம்
(4) சுவேதாஸ்வதர உபநிடதம் (5) கடோபநிடதம்

**33.** பிரமசூத்திரத்திற்கு இராமானுஜர் எழுதிய விளக்கவுரை
(1) வேதாந்த சாரம் (2) ஸ்ரீபாஷ்யம் (3) வேதாந்த தீபம்
(4) வேதாந்த சங்கிரகம் (5) அத்வைத சூடாமணி

**34.** உலகில் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே அடையப்பெறும் முத்தி
(1) பரமுத்தி (2) பதமுத்தி (3) சாலோகமுத்தி (4) விதேகமுத்தி (5) சீவன்முத்தி

**35.** தென்புலத்தார் என்று வள்ளுவரால் குறிப்பிடப்படுவோர்
(1) விருந்தினர் (2) பிதிரர்கள் (3) சுற்றத்தார்
(4) நண்பர்கள் (5) குருமார்கள்

- **36** தொடக்கம் **40** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**36. புராணங்கள் இந்துப் பண்பாட்டின் கருவூலம்**
(1) புராணங்கள் தென்னாட்டுச் சைவ, வைணவ மரபில் எதுவித செல்வாக்கும் செலுத்தவில்லை.
(2) குப்தர் காலத்தில் இந்துப் பண்பாடு புராணங்களாற் செல்வாக்குப் பெற்றது.
(3) புராணங்கள் ஐவகை இலட்சணங்களைக் கொண்டவை. இவற்றுடன் மேலும் பல இலட்சணங்களுடன் கூடியவை.
(4) புராணங்கள் திருக்கோயில் வழிபாடு, விரதமகிமை, தீர்த்தமகிமை, தலயாத்திரை, தவத்தின் பெருமை என்பன பற்றிக் கூறுவன.
(5) புராணங்கள் பழைமை வாய்ந்த நூல்களாக விளங்கி வேதம் கூறும் சிந்தனைகளுக்கு விளக்கம் தரும் வகையிலும் தெய்வீக வரலாற்றைப் பரப்பும் நோக்கிலும் எழுச்சிபெற்றன.

**37. சாக்த நெறியின் தொன்மையும் மேன்மையும்**
(1) சக்தியை முழுமுதற் தெய்வமாகக் கொண்டு இடம்பெறும் வழிபாடு சாக்த வழிபாடு ஆகும்.
(2) சாக்த நெறி சைவத்தோடு இணைந்த நிலையிலேயே சிறப்புப் பெறுகின்றது.
(3) உஷை, ராத்திரி போன்ற தெய்வங்களின் வழிபாடு சக்தி வழிபாட்டின் அம்சங்களைக் குறிப்பதாகும்.
(4) சக்திக்குரிய விரதங்களில் நவராத்திரி விரதம், ஆடிப்பூரம், வரலட்சுமி விரதம் போன்றவை சிறப்பானவை ஆகும்.
(5) மகாகவி பாரதியார் ஏனைய தெய்வங்களைப் போற்றிப்பாடியது போன்று சக்தியைப் போற்றவில்லை.

**38. மெய்கண்ட சாத்திரங்களின் மரபு**
(1) சைவ சித்தாந்தத்தின் முதல் நூல் எனச் சிறப்பிக்கப்படுவது சிவஞானபோதமாகும். அதன் ஆசிரியர் மெய்கண்டார் ஆவார்.
(2) சைவசமயக் குரவர்கள் செய்தளித்த தேவார திருவாசகங்களாகிய சிவாநுபூதிமிக்க திருமுறைகளுக்கு, சந்தான குரவர்கள் அநுபூதி நிலையில் இயற்றிய சித்தாந்த நூல்கள் இலக்கணம் போன்றவை.
(3) சிவஞானபோதம் ரௌரவ ஆகமப் பொருளை விளக்கும் வகையில் அமைந்தது என்பர்.
(4) உமாபதி சிவாச்சாரியார் மெய்கண்ட சாத்திர நூல்களில் ஐந்து நூல்களின் ஆசிரியராவார்.
(5) சிவஞானசித்தியார் சிவஞானபோதத்தின் வழிநூலாகும்.

**39. சைவப்புலவர் கா. அருணாசலதேசிகரும் மட்டக்களப்பு சுதேச இயக்கமும்**
(1) அருணாசலதேசிகர் மட்டக்களப்பின் சைவ சமயம் சார்பான சுதேச இயக்கத்தில் பங்கு கொண்டவராக விளங்கியவர்.
(2) இவர் நாற்பது வருடங்கள் ஆனைப்பந்தி சைவப் பாடசாலையில் தலைமையாசிரியராகப் பணியாற்றியவர்.
(3) இவர் பாடசாலை நேரம் என்றில்லாது சாயங்காலப் பள்ளி, இரவுப் பள்ளி என்பவற்றையும் மாணவர்களின் தேவைக்கேற்ப நடத்திய சமயப் பெரியார்.
(4) இவரது சமய அறிவையும் சேவையையும் பாராட்டி மட்டக்களப்பு தமிழ்க்கலை மன்றம் 1952 இல் 'தேசிகமணி' என்ற பட்டம் வழங்கி கௌரவித்தது.
(5) இவர் தேடிக் கற்கும் முயற்சியிலும் கற்றவர்களுடன் சேர்ந்து அறிவைப் பெருக்குவதிலும் எவ்வித ஈடுபாடும் கொண்டிருக்காதவர்.

**40. ஔவையாரின் ஆத்திசூடி நூலின் சிறப்பு**
(1) அறநூல்களைப் பாடிய ஔவையாரை சோழர் காலத்துக்குரியவராக அறிஞர் கருதுவர்.
(2) அவர் பாடிய பல நூல்களுள் ஆத்திசூடி என்ற நூலும் அடங்கும். அது மக்கள் பண்புடன் கூடிய நிறைவான வாழ்வு வாழ வழிகாட்டும் நூலாகும்.
(3) ஆத்திசூடி மிகச் சிறிய நூல். அது வேத உபநிடதக் கருத்துகளின் சாரமாக அமைந்துள்ளது என்பர்.
(4) ஆத்திசூடி பொருள் பொதிந்த பாடல்களால் ஆனது.
(5) ஆறுமுகநாவலர் 1851 இல் ஆத்திசூடியையும் கொன்றைவேந்தனையும் தமது பாலபாடம் முதலாம் புத்தகத்தில் பதிப்பித்து வெளியிட்டார்.

[பக். 5 ஐப் பார்க்க

● மேல்வரும் பகுதிகளிலே தரப்பட்டுள்ள சொற்களில் **இவ்விரண்டு** சொற்கள் குறிப்பிட்ட ஒரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **41** தொடக்கம் **45** வரையுள்ள வினாக்களுக்குப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>வாயு புராணம் | B<br>வைதிக தர்மத்தை நிலைநாட்டுதல் | C<br>காமாண்டக நீதிசாரம் | D<br>கனிஷ்கன் | E<br>பிரம்ம சித்தாந்தம் |
| F<br>முத்திரை தரித்தல் | G<br>பஞ்சசித்தாந்தம் | H<br>சுத்தி என்னும் தீட்சை | I<br>தாஸ்ய நாமம் சூடுதல் | J<br>காந்தாரக் கலை |

**41.** வைணவ மரபில் இடம்பெறும் பஞ்ச சம்ஸ்காரம் என்ற வழிபாட்டு முறைகளில் இரண்டினைக் குறிக்கும் சோடி
(1) AF (2) BI (3) CI (4) EF (5) FI

**42.** வட இந்தியாவில் நிலவிய குஷாணர் ஆட்சிக் காலத்துடன் தொடர்புடைய சோடி
(1) AC (2) BH (3) DG (4) DJ (5) EJ

**43.** இந்துக்களது பண்டைய வானியல் பற்றி அறிய உதவும் நூல்களின் பெயர்களைக் கொண்ட சோடி
(1) AE (2) AJ (3) BH (4) EG (5) EH

**44.** நவீன இந்து சமூக சீர்திருத்த இயக்கமாகிய ஆரிய சமாஜத்தின் கொள்கைகளைக் குறிக்கும் சோடி
(1) AB (2) BC (3) BH (4) CH (5) EH

**45.** குப்தர் கால இந்துப் பண்பாட்டு வளர்ச்சி பற்றி அறிய உதவும் நூல்களின் பெயர்களைக் கொண்ட சோடி
(1) AC (2) BH (3) DF (4) EG (5) FG

● **46** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களில் தரப்பட்டுள்ள கூற்றுகளை வாசித்து, அவற்றுக்குப் பொருத்தமானவற்றை **I, II, III, IV** ஆகிய நிரல்களிலிருந்து தெரிவுசெய்க.

| I | II | III | IV |
|---|---|---|---|
| A<br>கல்வெட்டுகள் | F<br>சேயோன் | K<br>மந்திரம் | P<br>சமய சமரச சன்மார்க்கம் |
| B<br>ஓமகுண்டம் | G<br>நாயன்மார் படிமங்கள் | L<br>நாணயங்கள் | Q<br>தட்சணை |
| C<br>வேதாரண்யம் | H<br>தூண்சாசனம் | M<br>வெறியாட்டு | R<br>இராஜராஜேஸ்வரம் |
| D<br>மாயோன் | I<br>அக்கினி | N<br>உலோகச் சிற்பங்கள் | S<br>பிறநாட்டு அறிஞர் குறிப்புகள் |
| E<br>சதுர்வேதி மங்கலம் | J<br>துறவு வாழ்வு | O<br>அநுபூதி நிலையினைப் பெறல் | T<br>நடுகல் |

**46.** இந்து நாகரிகத்தின் வரலாற்றை அறிய உதவும் மூலாதாரங்களைக் குறிப்பிடும் தொகுதி
(1) AHLS (2) AGLR (3) BHMS (4) CILR (5) EFLP

[பக். 6 ஐப் பார்க்க

**47.** யாகக் கிரியைகளில் இடம்பெறும் விடயங்களைக் குறிக்கும் தொகுதி

(1) A I L T (2) B I K Q (3) C H M R (4) D G O R (5) E F L T

**48.** சங்க காலச் சமய நெறியோடு தொடர்புடைய விடயங்களைக் குறிக்கும் தொகுதி

(1) A I M S (2) B J K P (3) D F M T (4) D I L R (5) E H O Q

**49.** தாயுமான சுவாமிகளின் சமய வாழ்வியலைக் குறிக்கும் தொகுதி

(1) A F N Q (2) B G L R (3) C J O P (4) C I M P (5) E J O R

**50.** இலங்கையில் பொலன்னறுவைக்கால இந்து சமயக் கலை வரலாற்றோடு தொடர்புடைய அம்சங்களைக் குறிக்கும் தொகுதி

(1) A F N Q (2) C I L T (3) D I L R (4) E G N R (5) E J L T

* * *

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

හින්දු ශිෂ්ටාචාරය II
இந்து நாகரிகம் II
Hindu Civilization II

46 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இல் எவையேனும் **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** இந்து நாகரிக வளர்ச்சியில் சிவாகமங்களின் முக்கியத்துவத்தை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.
(அ) சிவாகமம் என்பதன் பொருள் விளக்கம்
(ஆ) சிவாகமங்கள் வளம்படுத்தும் பக்தி நெறி
(இ) நுண்கலைகள்

**2.** சோழர் ஆட்சிக்காலத்தில் சைவ சமயம் வளம்பெற்றவாற்றை மேல்வரும் தலைப்புகளிற் பரிசீலிக்குக.
(அ) சோழ அரசர்களின் பங்கும் பணிகளும்
(ஆ) சைவ சமய வளர்ச்சி
(இ) கலை வளர்ச்சி

**3.** அறுவகைச் சமயநெறிகளில் ஒன்றாகிய கௌமார நெறியின் சிறப்பம்சங்களை மேல்வரும் விடயங்களின் அடிப்படையில் ஆராய்க.
(அ) முருக வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்
(ஆ) முருகனுக்குரிய சிறப்பான ஆலயங்கள்
(இ) கௌமார நெறி தொடர்பான இலக்கியங்கள்

## பகுதி II

**4.** இந்துப் பண்பாட்டு வளர்ச்சியில் இசை, நடனம் ஆகிய நுண்கலைகள் வளம்பெற்றவாற்றைப் பரிசீலிக்குக.

**5.** இந்து சமய தத்துவமரபிற் சங்கரரது அத்வைதம் பெறும் சிறப்பினை மேல்வரும் விடயங்களின் அடிப்படையில் ஆராய்க.
(அ) சங்கரரது காலம்
(ஆ) அவரது தத்துவக் கோட்பாட்டின் பிரதான அம்சங்கள்
(இ) வேதாந்தமும் சமய வாழ்வும்

**6.** சைவ சித்தாந்தம் கூறும் ஆன்மக் கோட்பாட்டினையும் ஆன்மா பக்குவப்படுவதற்குரிய வழிமுறைகளையும் மேல்வரும் தலைப்புகளில் தெளிவுபடுத்துக.
(அ) ஆன்மாவின் இயல்பு
(ஆ) ஆன்மாவும் மும்மலங்களும்
(இ) ஆன்மா பக்குவப்படுவதற்குரிய வழிமுறைகளும் வீடுபேறும்

**7.** "இந்து தர்மத்தைப் பேணிப் பாதுகாப்பதற்கு மக்களுக்கு ஏற்ற தர்மங்களைக் கூறுவதே தர்மசாத்திரங்களின் நோக்கமாகும்." மேல்வரும் தலைப்புகளில் இக்கூற்றினைப் பரிசீலிக்குக.
(அ) தர்மசாத்திரங்களின் பொருள் மரபு
(ஆ) சுவதர்மங்களும் சமூக தர்மங்களும்
(இ) அரசதர்மம்

**8.** மேல்வருவனவற்றுள் எவையேனும் **நான்கிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.
(அ) உபநிடதங்கள்
(ஆ) இராமாயணம்
(இ) ஆறுமுகநாவலர்
(ஈ) வல்லிபுர ஆழ்வார் ஆலயம்
(உ) இல்வாழ்க்கையில் வழிபாடு
(ஊ) இந்து கணிதவியல்

* * *